بسم ا لله الرحمن الرحيم

تشرف بإعداد و ترجمة هذا الكتاب

## مركز الدعوة والإرشاد في الزلفي

# شعبة توعية الجاليات

الزلفي ١١٩٣٢ - ص.ب: ١٨٢

ت: ٠٦ ٤٢٢٥٦٥٧ - فاكس: ٠٦ ٤٢٢٤٢٣٤



இந் நூல் தயாரிப்பு:

ஜுல்ஃபி. வெளி நாட்டவர் அழைப்பு மையம்.
ஜுல்ஃபி-11932. சவூதி .
F.G.O. at Zulfi - Zulfi 11932
P.O. Box: 182. Saudi Arabia
Phone: 064225657 Fax: 064224234

# الحج والعمرة

إعده وترجمة للغة التاميلية

## شعبة توعية الجاليات في الزلفي

الطبعة الأولى: ١١/١٤١٧ هـ.

ح شعبة توعية الجاليات بالزلفي ، ١٤١٧هـ

*فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر*

المكتب التعاوني للدعوة والإرشاد وتوعية الجاليات في الزلفي

الحج والعمرة والزيارة - الزلفي.

٤٦ ص ؛ ٨ × ١٢ سم

ردمك X - ٣٨ - ٨١٣ - ٩٩٦٠

(النص باللغة التاملية)

١ . الحج ٢ . العمرة أ . العنوان

ديوي ٢٥٢,٥ ١٧/٣٢٣٨

رقم الإيداع : ١٧/٣٢٣٨

ردمك : X - ٣٨ - ٨١٣ - ٩٩٦٠

الصف والإخراج: **شعبة توعية الجاليات في الزلفي**

## பொருளடக்கம் — محتويات الكتاب:

# முன்னுரை

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! சாந்தியும் கருணையும் அவன் தூதர் முஹம்மது (ஸல்) அவர்கள் மீதும், அவர்களுடைய குடும்பத்தார்கள், அவர்களைப் பின்பற்றிய தோழர்கள் யாவர்மீதும் உண்டாவதாக.

ஹஜ், உம்ராவைப் பற்றிய இப்புத்தகம் எல்லோரும் படிக்கும் விதத்தில் எளிய முறையில் உருவாக்கப்பட்டுள்ளது.

இதன் மூலம் பலன் கிடைக்க இறைவனிடம் வேண்டுகிறோம்.

# ஹஜ்ஜின் சட்டமும் சிறப்பும்:

ஹஜ், முஸ்லிமான ஆண்,பெண் அனைவர் மீதும் வாழ்நாளில் ஒரு முறை கடமையாகும் இது இஸ்லாமியக் கடமைகளில் ஐந்தாவது கடமையாகும் அல்லாஹ் கூறுகிறான் **அதற்கு (செல்வதற்கு) ரிய பாதையில் பயணம் செய்யச் சக்தி பெற்றிருக்கும் மனிதர்களுக்கு அல்லாஹ்வுக்காக ஹஜ் செய்வது கடமை யாகும்.** (3 97) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் இஸ்லாம் ஐந்து காரியங்கள் மீது அமைக்கப்பட்டுள்ளது அவை, வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை, நிச்சயமாக முஹம்மத் (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதராவார்கள் எனச் சாட்சி பகர்வது, தொழுகையை நிலை நிறுத்துவது, ஜகாத் கொடுப்பது, ரமழான் மாதம் நோன்பு நோற்பது, கண்ணியமிக்க அல்லாஹ்வின் வீட்டிற்குச் சென்றுவர சக்தி பெற்றவர் ஹஜ் செய்வது. ஹஜ், அல்லாஹ் தனது அடியார்களுக்கு அதிகமான கூலிதருவதாக வாக்களித்த மிகச் சிறந்த செயல்களில் ஒன்றாகும் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: யார் பெண்களிடத்தில் உறவாடாமலும் பாவம் செய்யாமலும் இந்த வீட்டை ஹஜ் செய்கிறாரோ

அவர் (பாவங்கள் அழிக்கப்பட்டு) அன்று பிறந்த பாலகன் போலாகிவிடுகிறார்

ஹஜ் வயது வந்த. புத்தி சுவாதீனமுள்ள. சக்தி பெற்ற அனைத்து முஸ்லிம்களுக்கும் கடமை யாகும். சக்தி பெறுவதென்பது சென்று வருவதற்கும் வாகனச் செலவிற்கும் சக்தி பெறுவதாகும் உதாரணமாக சென்று, வரும் வழியில் உணவு,நீர், உடை, வாகனம் ஆகியவற்றிற்குச் செலவு செய்யச் சக்தி பெற்றவனாக இருப்பதுபோல. இச்செலவு தனது குடம்பத்தினருக்கும் தனது செலவின் கீழுள்ளவர்களுக்கும் போக மேல் மிச்சமானதாக இருக்க வேண்டும். இது போன்றே ஹஜ்ஜை நிறைவேற்றுவதற்குத் தடையாக நோய் போன்ற இடையூறில்லாமல் உடல் ஆரோக்கியமாகவும், பயணம் செய்யும் பாதை பயமற்றதாகவும் இருக்கவேண்டும். பெண்களுக்கும் இதே நிபந்தனைதான் என்றாலும் அவளுடன் அவளுடைய கணவர் அல்லது அவள் மணம் முடித்துக் கொள்ள ஹராமாக்கப்பட்ட ஒருவர் செல்வது அவசியமாகும் இன்னும் அவள் இத்தாவிலிருக்கும் பெண்ணாகவுமிருக்கக் கூடாது. ஏனெனில் இத்தாவிலிருக்கும் பெண்கள் அவர்களின் இல்லங்களிலிருந்து வெளியே செல்வதை அல்லாஹ் தடுத்துள்ளான் எனவே யாருக்கேனும் இத்த

டைகளில் ஒருதடையிருக்குமானால் அவருக்கு ஹஜ் கடமையில்லை.

**ஹஜ்ஜின் ஒழுக்கங்கள்:**

1 – ஹஜ் செய்ய விரும்புபவர் தான் ஹஜ்ஜுக்குப் பயணமாகும் முன்னர் தனக்குத் தேவையான ஹஜ்ஜின் சட்டங்களைத் தெரிந்து கொள்வதும், ஒரு ஆலிம் - அறிஞர் அடங்கிய நண்பர்களோடு செல்வதில் ஆர்வம் கொள்வதும் அவசியமாகும். அல்லது அப்பயணத்தில் பயனுள்ள சில நூல்களைத் தன்னுடன் எடுத்துக் கொள்ள வேண்டும்.

2 – தனது ஹஜ் கொண்டு அல்லாஹ்வின் திருமுகத்தையும் அவனை நெருங்குவதையும் நாட வேண்டும்.

3 – பயனற்ற பேச்சுக்களை விட்டும் நாவைப் பாதுகாக்க வேண்டும். அதிகமாக திக்ர், துஆ செய்ய வேண்டும்.

4 – பிற மனிதர்களுக்கு நோவினை கொடுப்பதை விட்டும் தற்காத்துக் கொள்ள வேண்டும். ஹாஜிகளில் எவருக்கும் தொல்லை கொடுக்காமலிப்பதில் கவனம் செலுத்த வேண்டும்.

5 – முஸ்லிமான பெண் தன்னுடன் தன்னை மணந்து கொள்ள ஹராமாக்கப்பட்டவர்கள் இல்லாமல் ஹஜ்

ஜுக்குப் பயணமாகமலிருப்பது கடமையாக இருப் பது போல பர்தா அணிந்து தன்னை மூடிமறைத் துக் கொள்வதும் ஆண்கள் நெருக்கமாக உள்ள இடத்தை விட்டு தூரமாகிவிடுவதும் கட்டாயமா கும்.

6 – ஹஜ் செய்பவர் தான் வணக்கத்தில் ஈடுபட்டிருப் பதை நினைவில் கொள்ள வேண்டும். அதை ஒரு உல்லாசப் பயணமாகவும் அப்பயணத்தில் தன்னை யும் தன்னுடனுள்ளவர்களையும் போட்டோ எடுத் துக் கொள்வதும் தவறாகும். இப்படிச் சில ஹாஜி கள் செய்கின்றனர். அல்லாஹ் அவர்களுக்கு நேர் வழி காட்டுவானாக

# இஹ்ராம்:

இஹ்ராம் என்பது ஹஜ்அல்லது உம்ரா உடைய வணக்கத்தில் பிரவேசிப்பதாகும். இஹ்ராமிலுள்ளவ ருக்கு அதற்கு முன்னர் ஹலாலாக இருந்த சில காரி யங்கள் ஹராமாகி விடுகின்றன, ஏனெனில் அவர் ஒரு வணக்கத்தில் புகுந்துவிட்டார். ஹஜ் அல்லது உம்ரா வை விரும்புகிறவர் மக்காவிற்கு வெளியில் ரசூல் (ஸல்) அவர்கள் நிர்ணயம் செய்த எல்லைகளில் ஏதே னும் ஒரு எல்லையிலிருந்து முன்னோக்கி வருபவராக இருந்தால் இஹ்ராம் கட்டாயமாகும்.

## எல்லைகள்:

1 – **துல் ஹுலைஃபா:** இது மதீனாவிற்குச் சமீபமாக உள்ள ஒரு கிராமமாகும். தற்போது இதற்கு (அப்யார் அலி) எனக் கூறப்படுகிறது. இது மதீனாவாசிகளுக்குரிய எல்லையாகும்.

2 – **அல் ஜுஹ்ஃபா:** இது ராபிஃக் என்னும் ஊருக்கு சமீபமாக உள்ள ஒரு சிறிய ஊராகும். தற்போது மக்கள் ராபிஃகிலிருந்தே இஹ்ராம் கட்டிக் கொள்கிறார்கள். இது சிரியா வாசிகளின் எல்லை.

3 – **கர்னுல் மனாஸில்:** (ஸைலுல் கபீர்) இது தாயிஃபிற்குச் சமீபமான ஒரு இடம். இது நஜ்து வாசிகளின் எல்லையாகும்.

4 – **யலம்லம்:** இது மக்காவிலிருந்து சுமார் 70 கி.மீ. தூரத்திலுள்ளது. இது யமன் வாசிகளின் எல்லையாகும். இந்தியாவிலிருந்து வருபவர்களுக்கும் இதுவே எல்லையாகும்.

5 – **தாதுல் இர்க்:** இது இராக்வாசிகளின் எல்லையாகும்.

இவ்வைந்து இடங்களும் மேலே குறிப்பிட்ட ஊர் வாசிகளுக்கும் இவ்விடங்கள் வழியாக வருகின்றவர்களுக்கும் எல்லைகளாகும். இந்த எல்லைளுக்கு உள்ளே உள்ளவர்களும்,ஹரமில் உள்ளவர்களும் அவர்கள்

இருக்கின்ற இடங்களிலிருந்தே இஹ்ராம் செய்து கொள்ள வேண்டும்.

## எல்லையில் செய்ய வேண்டியவை:

இஹ்ராமுக்கு முன் செய்ய வேண்டிய சுன்னத்துகள்:

1 – நகங்களை வெட்டுவது, அக்குள் முடிகளைப் பிடுங்குவது அல்லது சிரைப்பது, மீசையைக் கத்தரிப்பது, மறைவிடத்தின் முடியைச் சிரைப்பது, குளிப்பது, உடம்புக்கு மட்டும் மணம் பூசிக் கொள்வது ஆடைகளுக்குப் பூசக் கூடாது.

2 – தைய்யலாடைகளைக் களைவது, கீழாடையும் மேலாடையும் அணிதல், பெண், தன்னை மூடி மறைத்துக் கொள்வதில் கவனம் செலுத்துவதுடன் தான் விரும்பிய ஆடைகளை அணிந்து கொள்ளலாம். அழகலங்காரங்களை வெளிப்படுத்தக் கூடாது. அன்னிய ஆடவர்கள் வரும் போது முகத்தையும் முன்கைகளையும் மறைத்துக் கொள்ள வேண்டும். கையுறைகளையும் முகமூடி அணிவதையும் தவிர்ந்து கொள்ள வேண்டும்.

3 – பள்ளிக்குச் சென்று அந்நேரம் தொழுகை நேரமாக இருந்தால் ஜமாஅத்துடன் தொழுவது அல்லது உழுவின் இரு ரக்அத்துகளைத் தொழுவது. அதன் பின்னர் இஹ்ராமைத் தொடங்குவது.

## ஹஜ் மூன்று வகைகளாகும்:

1 – ஹஜ்ஜுத் தமத்துஃ: இது உம்ராவிற்கு மட்டும் இஹ்ராம் செய்தல், பின்னர் ஹஜ்ஜுடைய நேரத்தில் மக்காவில் தானிருக்குமிடத்தில் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டிக் கொள்வது. எல்லையில் லப்பைக்க உம்ரத்தன் முதமத்திஅன் பிஹா இலல் ஹஜ் எனக் கூறிக் கொள்ள வேண்டும்.

பொருள்: இறைவா! உம்ராவை ஹஜ்ஜுடன் சேர்த்து நிய்யத்துச் செய்தவனாக உன் சமூகம் வந்து விட்டேன். இதுவே ஹஜ் வகைகளில் சிறந்ததாகும். குறிப்பாக ஹஜ்ஜுடைய நேரம் வருவதற்கு முன்னர் ஹஜ் செய்ய வருபவர்களுக்கு இதுவே மிகச் சிறந்தது. பின்னர் மக்காவில் அவர் இருக்கு மிடத்திலிருந்தே ஹஜ்ஜுக்காக மீண்டும் ஒரு முறை இஹ்ராம் செய்து கொண்டு லப்பைக்க ஹஜ்ஜன் எனக் கூறிக் கொள்ள வேண்டும். பொருள்: இறைவா! ஹஜ்ஜை நிய்யத் செய்தவனாக உன்னிடம் வந்துவிட்டேன். இவ்வகை ஹஜ் செய்பவர் குர்பானி கொடுப்பது கட்டாயமாகும். குர்பானி ஒருவருக்கு ஒரு ஆடு. அல்லது ஏழு நபருக்கு ஒரு மாடு அல்லது ஒரு ஒட்டகம்.

2 – ஹஜ்ஜுக் கிரான்: இது ஹஜ்ஜுக்கும் உம்ராவிற்கும் சேர்த்து ஒரே தடவையில் இஹ்ராம் செய்து

கொள்வதாகும். இவர் லப்பைக்க உம்ரத்தன் வ ஹஜ்ஜன் எனக் கூறிக் கொள்ள வேண்டும். இவர் ஆரம்பமாக உம்ராச் செய்துவிட்டு பின் அந்த இஹ்ராமுடனேயே நஹ்ருடைய நாள் வரை இருக்க வேண்டும்.கிரான், உம்ராவை ஹஜ்ஜுடன் சேர்த்து விடுவதின் மூலம் ஏற்படுகிறது. இது பெரும்பாலும் ஹஜ்ஜுடைய காலத்திற்கு முன்னர் உம்ராச் செய்து முடித்துவிட்டு பின்னர் ஹஜ்ஜுக் காக இஹ்ராம் கட்டிக் கொள்ளப் போதாத குறுகிய நேரத்தில் வருபவர்களுக்காகும். இந்த ஹஜ்ஜுக்கும் குர்பானி கட்டாயமாகும்.

3 – ஹஜ்ஜுல் இஃப்ராத்: இது ஹஜ்ஜை மட்டும் நிய்யத் செய்வதாகும் . இவர் எல்லையிலிருந்து இஹ்ராம் செய்து கொண்டு லைப்பைக்க ஹஜ்ஜன் எனக் கூறிக் கொள்ள வேண்டும். இவருக்கு குர்பானி கட்டாயமல்ல.

ஆகாயத்தில் பயணம் செய்பவராக இருந்தால் எல்லையில் இஹ்ராம் கட்டிக் கொள்வது கட்டாயமாகும். எல்லையைத் தெரிந்து கொள்வது கஷ்டமாக இருந்தால் அதற்கு முன்னர் போதுமான கால அளவில் கட்டிக் கொள்ள வேண்டும். அவன் எல்லையில் செய்ய வேண்டிய சுத்தம், மணம் பூசுதல், நகங்கள் வெட்டுதல், இஹ்ராம் ஆடை அணிதல் ஆகியவற்றை அ

வன் விரும்பினால் விமானத்தில் ஏறுவதற்கு முன்ன ரோ அல்லது விமானத்தில் வைத்தோ முழுமையாகச் செய்து கொள்ளலாம், பின்னர் எல்கையை அடைவ தற்கு முன்னர் அல்லது அதை அடைந்து கொள்ளும் நேரத்தில் இஹ்ராமை நிய்யத் செய்து கொள்ளவும்.

## இஹ்ராம் முறை:

1 – ஹஜ்ஜுத் தமத்துஃ செய்ய விரும்புகிறவர் லப்பைக் உம்ரதன் முதமத்திஅன் பிஹா இலல் ஹஜ் என்று கூறிக் கொள்ள வேண்டும்.

2 – ஹஜ்ஜுக் கிரான் செய்பவர் லப்பைக்க உம்ரத்தன் வஹஜ்ஜன் எனக் கூற வேண்டும்.

3 – இஃப்ராத் செய்ய விரும்புகிறவர் லப்பைக்க ஹஜ் ஜன் எனக் கூறவேண்டும்.

இஹ்ராம் செய்த பின்னர் தல்பியாச் சொல்வதும் அதை இஹ்ராம் செய்ததிலிருந்து கஃபத் துல்லாஹ் வில் வலம் வருவதை ஆரம்பிக்கும் வரை திரும்பத் திரும்ப சொல்லிக் கொண்டிருப்பது சுன்னத்தாகும். தல்பியா: லப்பைக்க அல்லாஹும்ம லப்பைக்க, லப் பைக்க லா ஷரீக்க லக், லப்பைக்க, இன்னல் ஹம்த வன் நிஃமத்த லக்க வல் முல்க், லா ஷரீக்க லக்.

لَبَّيْكَ اللَّهُمَّ لَبَّيْكَ ، لَبَّيْكَ لا شَرِيْكَ لَكَ لَبَّيْكَ، إِنَّ الْحَمْدَ وَالنِّعْمَةَ لَكَ وَالْمُلْكَ لاشَرِيْكَ لَكَ.

பொருள்: வந்துவிட்டேன், இறைவா! உன்னிடமே வந்து விட்டேன், உன்னிடமே வந்து விட்டேன், உனக்கு யாதொரு இணையுமில்லை. உன்னிடமே வந்து விட்டேன் நிச்சயமாக புகழும் அருட்பாக்கியங்களும் ஆட்சியும் உனக்கே உரியன. உனக்கு யாதொரு இணையுமில்லை.

## இஹ்ராமில் தடுக்கப்பட்டவை:

இஹ்ராம் கட்டிக் கொண்டவருக்கு பின் வருபவை ஹராமாகும்.

1 - தலை மற்றும் உடம்பின் ஏனைய பாகங்களிலுள்ள முடிகளை நீக்குவது. எனினும் தேவையின் நிமித்தம் இலேசாக தலையைச் சொரிவதால் (முடி விழுந்து விடுவதில்) குற்ற மில்லை.

2 - நகங்களை வெட்டுதல், எனினும் நகம் உடைந்து விட்டால் அல்லது அது அவனுக்குத் தொல்லை கொடுத்துக் கொண்டிருந்தால் அதை வெட்டுவது குற்றமல்ல.

3 - வாசனையுள்ள சோப்பு போன்ற வாசனையுள்ள பொருட்கள் உபயோகிப்பது.

4 – உடலுறவு கொள்ளல் மற்றும் மனைவியை இச்சை யுடன் பார்த்தல், அணைத்தல், முத்தமிடுதல், திருமணம் போன்ற உடலுறவைத் தூண்டக்கூடிய காரியங்களைச் செய்தல்.

5 – கையுறைகள் அணிதல்.

6 – வேட்டைப் பிராணிகளைக் கொல்லுதல், இவ்வனைத்தும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் ஹராமாகும். ஆண்களுக்கு அதிகப்படியாக இன்னும் சில ஹராமாகின்றன.

அ – தையல் ஆடை அணிவது, எனினும் இஹ்ராமிலுள்ளவன் பெல்ட், கண்ணாடி, வாட்ச் போன்ற தேவையுள்ள பொருட்கள் அணிவது கூடும்.

ஆ – தலையை ஒட்டினாற்போல ஏதேனும் கொண்டு தலையை மறைத்தல். தலையோடு ஒட்டாமல் சற்று உயரமாக வைத்து தலையை மறைப்பது குற்றமில்லை. உதாரணமாக குடை, வாகனம், கூடாரம் போன்றவற்றிற்குள் நுழைந்து கொள்வதைப்போல.

.ஆ. காலுறை அணிவது. செருப்புக் கிடைக்கவில்லையானால் பூட்ஸ் அணிந்து கொள்ளலாம். தடுக்கப்பட்ட இவற்றில் ஒன்றை யாரேனும் செய்துவிட்டால் அவனுக்கு மூன்று நிலைகள் உள்ளன.

1 – தக்க காரணமின்றிச் செய்பவன், இவன் பாவியாவான், அபராதமுண்டு.

2 – தேவைக்காகச் செய்பவன், இவன் பாவியாகமாட்டான், அபராதமுண்டு.

3 – தக்க காரணத்துடன் செய்பவன், அதாவது அறியாமலோ, மறந்தோ, நிர்ப்பந்தமாகவோ செய்வது போல. இவனுக்குக் குற்றமுமில்லை. அபராதமுமில்லை.

## தவா∴ப் (வலம் வருதல்)

மஸ்ஜிதுல் ஹராமில் (க∴பத்துல்லாவில்) நுழையும் போது வலது காலை வைத்து பிஸ் மில்லாஹி, வஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலா ரசூலில்லாஹ் அல்லாஹும்ம மக்∴பிரலீ துநூபி வ∴ப்தஹ் லீ அப்வாப ரஹ்மத்திக்க என்று கூறுவது சுன்னத்தாகும்.

**بسم الله وا لصلاة والسّلام على رسوْلِ الله اللهمّ اغفرْ لي ذنوبي وا فتح لي أبواب رحمتك**

**பொருள்:** அல்லாஹ்வின் பெயர் கூறி நுழைகிறேன். கருணையும், ஈடேற்றமும் அல்லாஹ்வின் தூதரின் மீதும் உண்டாவதாக! இறைவா! எனது பாவங்களை மன்னித்துவிடு உனது அருள் வாயல்களை எனக்குத் திறந்துவிடு.

இந்தத் துஆ எல்லாப் பள்ளிகளுக்கும் பொதுவானதாகும். பின்னர் க∴பாவை வலம் வருவதற்காக அ

தை முன்னோக்க வேண்டும். தவாஃப் என்பது அல் லாஹ்விற்கு வணக்கம் செய்யும் எண்ணத்தில் ஹஜருல் அஸ்வதிலிருந்து ஆரம்பித்து இடதுபுறமாக கஃபா வை ஏழுமுறை சுற்றி வருவதாகும். முடிக்கும் போது ஹஜருல் அஸ்வதில் முடிக்க வேண் டும். தவாஃப் செய்யும் போது உளூவுடன் இருக்க வேண்டும்.

## தவாஃப் செய்யும் முறை:

1 - ஹஜருல் அஸ்வதின் பக்கம் சென்று, அதைத் த னது வலது கையால் தொட்டு, **பிஸ்மில்லாஹி அல்லாஹு அக்பர்** எனக் கூறிக் கொள்ளவேண் டும். இத்துடன் **அல்லாஹும்ம ஈமானம் பிக வத ஸ்தீகம் பிகிதாபிக வவஃபாஅம் பிஅஹ்திக வத்திபாஅன் லிசுன்னத்தி நபிய்யிக** என்பதை யும் சேர்த்து சொன்னால் சிறப்பாகும். முடிந்தால் அக்கல்லை முத்தமிட்டுக் கொள்ள வேண்டும். அதை முத்தமிட முடியவில்லையெனில் கல்லைத் தொட்ட தனது கையை முத்தமிட்டுக் கொள்ள வேண்டும். ஹஜருல் அஸ்வதைத் தொட முடிய வில்லையானால் அதை முன்னோக்கி, அல்லாஹு அக்பர் எனக் கூறி தனது கை கொண்டு அதன் பால் சுட்டிக் காட்டிக் கொள்ள வேண்டும், தனது கையை முத்தமிடக் கூடாது. பின்னர் கஃபத்துல்

லாவை தனது இடப்புறமாக்கி, தவாஃபைத் தொடங்க வேண்டும். தான் விரும்பிய துஆக்களைக் கேட்டுக் கொள்ளலாம் அல்லது தனக்குத் தெரிந்த குர்ஆன் வசனங்களை ஓதிக் கொள்ளலாம். தனது மொழியில் தனக்கும், தான் விரும்பியவருக்கும் துஆச் செய்து கொள்ளலாம். இங்கு துஆச் செய்வதற்கென குறிப்பான துஆக்கள் ஏதுமில்லை.

2. – ருக்னுல் யமானியை அடைந்துவிட்டால், முடிந்தால் அதைத் தொட்டு பிஸ்மில்லாஹி அல்லாஹு அக்பர் எனக் கூறிக் கொள்ள வேண்டும். தனது கையை முத்தமிடக் கூடாது. முடியாவிட்டால் தொடர்ந்து நடந்து கொண்டிருக்க வேண்டும். அதன் பக்கம் தனது கையால் சுட்டிக் காட்டவும், தக்பீர் சொல்லவும் கூடாது. ருக்னுல் யமானிக்கும் ஹஜருல் அஸ்வதிற்குமிடையில் ரப்பனா ஆத்தினா ஃபித்துன்யா ஹஸனத்தன் வஃபில் ஆகிரத்தி ஹஸனத்தன் வகினா அதாபன் நார் எனக் கூறிக் கொள்ள வேண்டும்.

رَبَّنَا آتِنَا فِي الدُّنْيَا حَسَنَةً وَفِي الآخِرَةِ حَسَنَةً وَقِنَا عَذَابَ النَّارِ.

3 – ஹஜருல் அஸ்வதை அடைந்துவிட்டால் வலக் கையால் தொட வேண்டும். முடியவில்லையானால்

அல்லாஹு அக்பர் எனக் கூறி தனது கையால் சுட்டிக் காட்டிக் கொள்ள வேண்டும். இப்படிச் செய்வது கொண்டு தவாஃபின் ஏழு சுத்துக்களில் ஒரு சுத்து முடிவடைந்து விடுகிறது, மீதமுள்ள சுத்துக்களையும் இவ்வாறே பூர்த்தி செய்யவும்.

4 – வலம் வருவதைத் தொடர்ந்து செய்ய வேண்டும். ஏழு சுற்றுக்களைப் பூர்த்தியாக்கும் வரை முதல் சுற்றில் செய்தது போலவே செய்து கொள்ள வேண் டும். ஹஜருல் அஸ்வதைக் கடந்து செல்லும் போ தெல்லாம் தக்பீர் சொல்லிக் கொள்ள வேண்டும். இது போன்றே ஏழாவது சுற்றுக்குப் பின்னரும் தக் பீர் சொல்லிக் கொள்ள வேண்டும்.

5 – தவாஃபின்போது இரண்டு விஷயம் சுன்னத்தாகும்: 1 – மேலாடையின் நடுப்பகுதியை வலது அக்கு ளுக்குக் கீழ் வழியாகக் கொண்டு வந்து, ஆடை யின் இரு ஓரங்களையும் இடது தோள் புஜத்தின் மீது போட்டு மூடிக் கொள்ள வேண்டும். வலது தோள் புஜம் மட்டும் திறந்திருக்க வேண்டும். த வாஃபை முடித்த பிறகு மேலாடையை இரண்டு தோள் புஜங்கள் மீதும், நெஞ்சின் மீதும் போட்டு மூ டிக்கொள்ள வேண்டும். இது ஆண்களுக்கு மட் டும்தான். 2 – முதல் மூன்று சுற்றில் கால்களை

(எட்டி வைக்காமல்) சுருக்கி வைத்து சற்று வேகமாக நடக்க வேண்டும்.

தவாஃபுக்குப் பின்னர் மகாம் இப்றாஹீமுக்குப் பின்னால் இரண்டு ரக்அத்துக்கள் தொழுவது சுன்னத்தாகும். அப்படித் தொழும் போது மகாம் அவனுக்கும் கஃபத்துல்லாவிற்குமிடையே இருக்க வேண்டும். முதல் ரக்அத்தில் ஃபாத்திஹாவும் குல் யாஅய்யுஹல் காஃபிரூனும் இரண்டாவது ரக்அத்தில் ஃபாத்திஹாவும் குல் ஹுவல்லாஹு அஹதும் ஓதிக் கொள்ள வேண்டும். கடுமையான நெருக்கடியினால் மகாம் இப்றாஹீமுக்குப் பின்னால் தொழ முடியவில்லையானால் பள்ளியின் எந்த இடத்தில் வேண்டுமானாலும் தொழுது கொள்ளலாம். ஜம் ஜம் தண்ணீரை வயிறு புடைக்க அதாவது அதிகமாகக் குடிப்பது சுன்னத்தாகும்.

## சயீ செய்வது*

பின்னர் சயீ செய்யுமிடத்திற்குச் சென்று, ஸஃபாவின் பக்கமாகச் செல்ல வேண்டும். அதன் பக்கம்

* ஸஃபா, மர்வாக்கிடையில் ஓடுவது

நெருங்கிவிட்டால் (இன்னஸ் ஸஃபா வல்மர்வத்த மின் ஷஆயிரில்லாஹ்) என்ற வசனத்தை ஓத வேண் டும். கஃபாவைக் காணுமளவிற்கு ஸஃபாவில் ஏற வேண்டும். பின்னர் கஃபாவை முன்னோக்கி தனது இரு கைகளையும் உயர்த்தி, அல்லாஹ்வைப் புகழ்ந் து தான் விரும்பிய துஆவைக் கேட்டுக் கொள்ள வேண்டும் .உதாரணமாக லாஇலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர் லாஇலாஹ இல்லல்லாஹு வஹ் தஹு லா ஷரீக்க லஹு, லஹுல் முல்க்கு வலஹுல் ஹம்து யுஹ்யீ வயுமீத்து வஹுவ அலாக் குல்லி ஷை இன் கதீர், லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தா அன் ஜஸ வஃதா வநஸர அப்தா வஹஸமல் அஹ்ஸாப வஹ்தஹு

لا إله إلا الله والله أكبر، لا إله إلا الله وحـده لا شـريك له، له الملك وله الحمد يحيي ويميت وهو علي كل شيء قدير، لا إلـه إلا الله وحـده أنجـز وعـده ونصر عبـده وهزم الأحزاب وحده.

என மூன்று முறை கூறிக் கொண்டு நீண்ட நேரம் துஆச் செய்ய வேண்டும்.

பின்னர் அதிலிருந்து இறங்கி மர்வாவின் பக்கம் செல்ல வேண்டும். பச்சைத் தூணை அடைந் தால்

அடுத்த பச்சைத் தூணை அடையும் வரை முடிந்த அளவு விரைந்து செல்வது சுன்னத்தாகும். இப்படிச் செய்யும் போது யாருக்கும் தொந்தரவு கொடுக்கக் கூடாது என்பது நிபந்தனையாகும். (விரைந்து செல்வது ஆண்களுக்கு மட்டுமே பெண்களுக்கல்ல) மர்வாவை அடைந்துவிட்டால் அதில் ஏறி கிப்லாவை முன்னோக்கி, கைகளை உயர்த்தி, ஸஃபாவில் கூறியது போலக் கூறிக் கொள்ள வேண்டும். இப்படி ஒருவர் செய்து விட்டால் அவர் சயீக்குரிய ஏழு தடவைகளில் ஒன்றை முடித்துவிட்டார். துஆவிற்குப் பின்னர் மர்வாவிலிருந்து ஸஃபாவை நோக்கிச் செல்ல வேண்டும். முந்திய தடவை செய்தது போலவே செய்து கொள்ள வேண்டும். ஸயீயின் இடையில் துஆவை அதிகப்படுத்திக் கொள்வது சுன்னத்தாகும்.

ஹஜ் செய்பவர் ஹஜ்ஜுத் தமத்துஃ செய்பவராக இருந்தால் ஸயீக்குப் பின்னர் தலை முடியைச் சிரைத்து, உம்ராவை முடித்து, சாதாரண ஆடைகள் அணிந்து இஹ்ராமிலிருந்து வெளியேறிவிடுவதற்கு வசதி பெறுகிறார். எட்டாவது நாள் வந்து விட்டால் அவர் இருக்குமிடத்திலேயே ளுஹர் தொழுகைக்கு சிறிது முன்னர் ஹஜ்ஜுக்காக இஹ்ராம் செய்து கொள்ள வேண்டும். உம்ராவின் இஹ்ராமில் செய்த அனைத்தையும் செய்து கொள்ள வேண்டும் பின்னர் இஹ்ரா

மை நிய்யத் செய்து லப்பைக்க ஹஜ்ஜன் எனக் கூறி, தல்பியாவைக் கூறவேண்டும். பின்னர் ளுஹர், அஸர், மக்ரிப். இஷா, ஃபஜ்ர் தொழுகைகளை மினாவில் கஸராகத் தொழுது கொள்ள வேண்டும்.

## துல் ஹஜ் 8 – ஆம் நாள்:

ஹாஜி மினாவுக்குச் சென்று அங்கு ளுஹர்,அஸர், மக்ரிப், இஷா, ஃபஜ்ர் ஆகிய தொழுகைகளைத் தொழ வேண்டும். இவற்றில் நான்கு ரக்அத்துத் தொழுகைகளை இரண்டு ரக்அத்துகளாகச் சுருக்கித் தொழ வேண்டும்.

## 9 – ஆம் நாள் (அரஃபா நாள்)

இந்நாளில் பின் வருவம் விஷயங்கள் மார்க்கமாக்கப்பட்டுள்ளன.

1 – சூரியன் உதித்த பின்னர் ஹாஜி அரஃபாவிற்குச் சென்று அங்கு சூரியன் மறையும் வரை தங்க வேண்டும். சூரியன் மத்தியிலிருந்து சாய்ந்து விட்டால் ளுஹரையும் அஸரையும் சேர்த்து,சுருக்கித் தொழ வேண்டும். தொழுகைக்குப் பின்னர் திக்ர், துஆ, தல்பியாவில் ஈடுபட வேண்டும். துஅவையும் அல்லாஹ்விற்குப் பணிவதையும் அதிகப்படுத்துவது சுன்னத்தாகும். தனக்காகவும் பிற முஸ்

லிம்களுக்காகவும் துஆக் கேட்க வேண்டும். தான் விரும்பியவற்றையெல்லாம் கேட்கலாம். துஆச் செய்யும் நேரம் கைகளை உயர்த்துவது முஸ்த ஹப்பாகும். ( விரும்பத்தக்கதாகும்) அர:ஃபாவில் தங்குவது ஹஜ்ஜுக் கடமைகளில் ஒரு கடமை யாகும். எவரேனும் அர:ஃபாவில் தங்கவில்லையா னால் அவருக்கு ஹஜ் கூடாது. அங்கு தங்குவ தற்கான நேரம் 9 ஆம் நாள் சூரியன் உதயமான திலிருந்து 10 ஆம் நாள் :ஃபஜ்ர் உதயமாகும் வரையாகும். எனவே ஒருவா் இந்த நேரத்தின் இரவிலோ பகலிலோ கொஞ்ச நேரம் தங்கிவிட் டால் அவரின் ஹஜ் பூரண மடைந்து விடுகிறது. ஹாஜி அர:ஃபாவின் எல்லைக்குள் நுழைந்து விட் டார் என்பதை உறுதிப் படுத்திக் கொள்வது அவ சியமாகும்.

2 – அர:ஃபா தினத்தின் சூரியன் மறைந்துவிட்டதென நன்கு தெரிந்துவிட்டால் முஸ்தலி:ஃபாவை நோக் கி அமைதியாகவும் கம்பீரமாகவும் உரத்தகுரலில் தல்பியாக் கூறிக் கொண்டும் செல்ல வேண்டும்.

**முஸ்தலி:ஃபா:** முஸ்தலி:ஃபாவை அடைந்ததும் மக்ரிப், இஷாத் தொழுகைகளை சேர்த்துச் சுருக்கித் தொழ வேண்டும். பின்னர் உணவு போன்றவற்றைத்

தயார் செய்து கொள்வது அவனுக்கு வசதியாக இருக்கும். ஃபஜ்ருத் தொழுகைக்கு சுறுசுறுப்பாக எழுந்து விடுவதற்காக சீக்கிரமாகத் தூங்குவது சிறப்பாகும்.

## 10 ஆம் நாள் (பெரு நாள்):

1 – ஃபஜ்ருத் தொழுகையின் நேரம் வந்துவிட்டால் ஃபஜ்ருத் தொழுதுவிட்டு அதே இடத்தில் அமர்ந்து நல்ல வெளிச்சம் வரும் வரை திக்ர், துஆவை அதிகப்படுத்த வேண்டும்.

2 – ஏழு பொடிக் கற்களைப் பொறுக்கிக் கொண்டு தல்பியாக் கூறியவராக சூரியன் உதயமாகும் முன் மினாவை நோக்கிச் செல்ல வேண்டும்.

3 – ஜம்ரத்துல் அகபா (ஜம்ரத்துல் குப்ரா)வை அடையும் வரை தல்பியாவைக் கூறிக் கொண்டே இருக்க வேண்டும். அங்கே கற்களை ஒவ்வொன்றாக எறிய வேண்டும். ஒவ்வொரு கல் எறியும் போதும் அல்லாஹு அக்பர் எனக் கூற வேண்டும்.

4 – எறிந்த பின்னர் அவர் ஹஜ்ஜுத் தமத்துஃ அல்லது ஹஜ்ஜுக் கிரான் செய்தவராக இருந்தால் குர்பானி கொடுக்க வேண்டும். அதை அவர் சாப்பிடுவதும் தர்மம் செய்வதும் முஸ்தஹப்பாகும்.

5 – குர்பானி கொடுத்த பின்னர் தலை முழுவதையும் சிரைக்கவோ அல்லது முழுவதையும் வெட்டிக்

கொள்ளவோ வேண்டும். சிரைப்பதே சிறந்தது. பெண் அனைத்து முடிகளிலிருந்தும் விரல் நுனி அளவிற்கு(சுமார் 3 செ.மீ) வெட்டிக் கொள்ள வேண்டும். அதன் பின்னர் இஹ்ராமின் காரணமாக தடுக்கப்பட்டிருந்த, ஆடை அணிதல், மணம் பூசுதல், நகம் வெட்டுதல், முடி வெட்டுதல் போன்ற அனைத்தும் ஹலாலாகும். எனவே அதன் பின்னர் அவர் குளித்துக் கொள்வது, சுத்தம் செய்வது, மணம் பூசிக் கொள்வது, ஆடைகள் அணிவது முஸ்தஹப்பாகும். எனினும் உடலுறவு மட்டும், கஃபத்துல்லாவை வலம் வருவது வரை தடுக்கப் பட்டதாகவே இருக்கும்.

6 - ஹஜ்ஜுடைய தவாஃபை நிறை வேற்றுவதற்காக மஸ்ஜிதுல் ஹராமிற்குச் செல்ல வேண்டும். இதற்கு தவாஃபுல் இஃபாழா எனக் கூறப்படும். கஃபத்துல்லாவில் 7 தடவை வலம் வந்த பின்னர் இரண்டு ரக்அத்துக்கள் தொழ வேண்டும். பின்னர் சயீச் செய்யுமிடத்திற்குச் சென்று ஸஃபா, மர்வாக்கிடையே ஏழு தடவை சயீச் செய்ய வேண்டும். சயீக்குப் பின்னர் இஹ்ராமின் காரணமாகத் தடுக்கப் பட்டிருந்த அனைத்தும் ஹலாலாகும். பெண்ணிடம் உடலுறவு கொள்வது உட்பட.

7- ஹாஜி மினாவில் 11,12 ஆவது இரவுகள் தங்கு வது கட்டாயமாகும். 12 ஆவது இரவு ஊருக்குப் புறப்படாமல் பிந்திவிடுபவர் 13 வது இரவும் தங் குவதும் கட்டாயமாகும். இரவு தங்க வேண்டு மென்பதின் கருத்து, இரவில் அதிக நேரமும் அங் கு தங்க வேண்டு மென்பதாகும். கல் எறிதல் பின் னர் குர்பானி கொடுத்தல் பின்னர் முடி எடுத்தல் பின்னர் வலம் வருதல் என வரிசைக்கிரமமாகக் செய்வது சுன்னத்தாகும். அவற்றை வரிசை மாறிச் செய்தாலும் குற்றமில்லை.

## 11 - ஆம் நாள்:

இந்நாளில் ஹாஜி கல்லெறிவது கட்டாயமாகும். சூரியன் மத்தியிலிருந்து சாய்ந்ததிலிருந்து எறிவதற் குரிய நேரம் ஆரம்பமாகிவிடுகிறது. அதற்கு முன் னால் கூடாது. ஜம்ரத்து சுக்ராவிலிருந்து ஆரம்பித்து பின்னர் ஜம்ராத்துல் உஸ்தாவில் எறிந்த பின்னர் ஜம் ரத்துல் குப்ராவைக் கொண்டு முடிக்க வேண்டும். ஜம் ரத்து சுக்ரா என்பது கல்லெறிவதற்குரிய முதலிடத்திற் கும் ஜம்ரத்துல் உஸ்த்தா என்பது 2 ஆவது இடத் திற்கும் ஜம் ரத்துல் குப்ரா என்பது 3 ஆவது இடத் திற்கும் சொல்லப்படும்.

## எறியும் முறை:

1 – 21 பொடிக் கற்களைத் தன்னுடன் எடுத்துக் கொள்ள வேண்டும். பின்னர்

ஜம்ரத்துச் சுக்ராவிற்குச் சென்று ஏழு கற்களை ஒவ்வொரு கற்களுடனும் அல்லாஹு அக்பர் எனக் கூறி எறிய வேண்டும்.கற்கள் தொட்டியினுள் விழுவதில் கவனம் செலுத்த வேண்டும். கற்களை ஒன்றன் பின் ஒன்றாக எறிய வேண்டும.

2 – சிறிது வலது பாகம் சென்று நின்று கொண்டு நீண்ட நேரம் துஆச் செய்வது சுன்னத்தாகும்.

3 – இதன் பிறகு ஜம்ரத்துல் உஸ்த்தாவுக்குச் சென்று ஏழு கற்களை ஒவ்வொன்றாக அல்லாஹு அக்பர் எனக் கூறி எறிய வேண்டும்.

4 – பிறகு சிறிது இடது புறம் சென்று நின்று கொண்டு நீண்ட நேரம் துஆச் செய்வது சுன்னத்.

5 – ஜம்ரத்துல் குப்ராவுக்குச் சென்று ஏழு கற்களை ஒவ்வொன்றாக தக்பீர் கூறி எறிய வேண்டும்.பின்பு அங்கு நிற்காமல் சென்றுவிட வேண்டும்.

## 12 – ஆம் நாள்:

1 – 11 ஆம் நாள் செய்தது போலவே செய்து கொள்ள வேண்டும். ஹாஜி தாமதமாகி 13 வது நாள் தங்கி

யிருக்க விரும்பினால் அதுவே சிறந்ததாகும். அப்படி இருந்து விட்டால் 11,12 ஆவது நாட்களில் செய்தது போலவே செய்து கொள்ள வேண்டும்.

2 – 12 ஆம் நாள் கல்லெறிந்த பின்னர், அல்லது தாமதமாகச் செல்பவர் 13ஆம் நாள் கல்லெறிந்த பின்னர் கஃபா சென்று தவாஃப் செய்ய வேண்டும்.பின்பு முடிந்தால் மகாம் இப்றாஹீமுக்குப் பின்னால் முடியாவிட்டால் பள்ளியின் ஏதாவது ஒரு பாகத்தில் இரண்டு ரக்அத்துகள் தொழுது கொள்ளவது சுன்னத். இத்தவாஃப் மாதவிடாய்க் காரிக்கும் பிரசவத்தீட்டுடையவளுக்கும் கிடையாது.

3 – இதன் பின்னர் ஹாஜி வேறு எதிலும் ஈடுபடாமலிருப்பது கட்டாயமாகும். எனினும் திக்ர், துஆ, பயனுள்ளவற்றைக் கேட்பது போன்றவற்றில் ஈடுபட்டவராக மக்காவிலிருந்து வெளியேற வேண்டும் தவாஃபுக்குப் பின்னர் நண்பர்களை எதிர்பார்ப்பது அல்லது சாமான்களை எடுத்துக் கொள்வது அல்லது வழியில் தேவைப்படுபவற்றை வாங்கிக் கொள்வது போன்ற காரணங்களுக்காக சிறிது நேரம் தங்கியிருப்பது குற்றமல்ல.

## ஹஜ்ஜுக் கடமைகள்:

1- இஹ்ராம் செய்து கொள்வது. 2.அரஃபாவில் தங்குவது. 3.தவாஃபுல் இஃபாழா (பெரு நாளில் செய்யும் தவாஃப்). 4.ஸஃபா மர்வாவிற்கிடையே ஓடுவது.

**இக் கடமைகளில் ஏதேனும் ஒன்றை ஒருவர் விட்டுவிட்டால் அவருக்கு ஹஜ் கூடாது**

## ஹஜ்ஜின் வாஜிபுகள் (முக்கியமானவை)

1. எல்கையில் இஹ்ராம் செய்து கொள்வது. 2.அரஃபாவில் பகலில் தங்கியவர் சூரியன் மறையும் வரை அங்கு தங்குவது. 3. பலவீனர்களையும் பெண்களையும் தவிர அதி காலை நன்கு வெளுக்கும் வரை முஸ்தலிஃபாவில் தங்குவது. பலவீனர்களும் பெண்களும் நடு இரவு வரை தங்குவது கூடும். 4. தஷ்ரீக்குடைய இரவுகளில் மினாவில் தங்குவது. 5.தஷ்ரீக்குடைய நாட்களில் கற்கள் எறிவது. 6.சிரைப்பது அல்லது முடி வெட்டுவது. 7-தவாஃபுல் வதாஃ. (தஷ்ரீக்குடைய இரவு கள் 11, 12, 13 ஆவது இரவுகளாகும்.)

**இவற்றில் ஒன்றை யாரேனும் விட்டுவிட்டால் அவர் குர்பானி கொடுப்பது கட்டாயமாகும். அதாவது ஹரம் ஷரீஃபிலுள்ள ஏழைகளுக்காக ஒரு ஆடு, அல்லது ஏழு**

நபர் சேர்ந்து ஒரு மாடு அல்லது ஒரு ஒட்டகம் அறுத்துக் கொடுக்க வேண்டும்.

## நபி(ஸல்) அவர்களின் பள்ளியை தரிசித்தல்

ரசூல் (ஸல்) அவர்களின் பள்ளியில் தொழுவதற்காக அப்பள்ளியைச் சந்திப்பது முஸ்தஹப்பாகும் ஹதீஸில் வந்துள்ளது: இங்கு தொழுவது மஸ்ஜிதுல் ஹராம் அல்லாத ஏனைய பள்ளிகளில் தொழும் ஆயிரம் தொழுகைகளை விடச் சிறந்ததாகும். இப்பள்ளியைச் சந்திப்பது காலம் முழுவதும் மார்க்கமாக்கப் பட்டதாகும். அதற்கென குறிப்பிட்ட நேரம் கிடையாது. அது ஹஜ்ஜில் செய்ய வேண்டிய காரியங்களிலுள்ளதல்ல. ஒரு முஸ்லிம் இப்பள்ளியில் இருக்கும் வரை நபி (ஸல்) அவர்களின் கப்ரையும் அவர்களின் இரு நண்பர்களான அபூபக்கர் (ரலி) உமர் (ரலி) அவர்களுடைய கப்ருகளையும் சந்திப்பது முஸ்தஹப்பாகும் இந்த கப்ர் ஸியாரத் ஆண்களுக்கு மட்டுமே முஸ்தஹப்பாகும் பெண்களுக்கல்ல. நபி (ஸல்) அவர்களின் அறையைத் தொடுவது அல்லது அதை வலம் வருவது அல்லது துஆச் செய்யும் நேரத்தில் அதை முன்னோக்குவது கூடாது.

# உம்ரா

உம்ரா செய்வது ஒவ்வொரு முஸ்லிம் மீதும் வாழ் நாளில் ஒரு முறை கடைமையாகும். அல்லாஹ் கூறு கிறான்: **அல்லாஹ்வுக்காக உம்ராவையும் ஹஜ்ஜை யும் நீங்கள் நிறைவு செய்யுங்கள்.**(2:196) உம்ரா,ஒரு முஸ்லிம் முடிந்த வரை திரும்பத் திரும்ப செய்ய வேண்டிய சிறந்த செயல்களில் ஒன்றாகும். உம்ராவுக் காக ஆரம்பமாக இஹ்ராம் செய்து கொள்ள வேண்டும்.

## இஹ்ராம்:

இஹ்ராம் என்பது ஹஜ்அல்லது உம்ரா உடைய வணக்கத்தில் பிரவேசிப்பதாகும். இஹ்ராமிலுள்ளவ ருக்கு அதற்கு முன்னா் ஹலாலாக இருந்த சில காரி யங்கள் ஹராமாகி விடுகின்றன, ஏனெனில் அவா் ஒரு வணக்கத்தில் புகுந்துவிட்டாா். ஹஜ் அல்லது உம்ரா வை விரும்புகிறவா் மக்காவிற்கு வெளியில் ரசூல் (ஸல்) அவா்கள் நிா்ணயம் செய்த எல்லைகளில் ஏதே னும் ஒரு எல்லையிலிருந்து முன்னோக்கி வருபவராக இருந்தால் இஹ்ராம் கட்டாயமாகும்.

## எல்லைகள்:

1 – **துல் ஹுலைஃபா:** இது மதீனாவிற்குச் சமீபமாக

உள்ள ஒரு கிராமமாகும். தற்போது இதற்கு (அப்யார் அலி) எனக் கூறப்படுகிறது. இது மதீனாவாசிகளுக்குரிய எல்லையாகும்.

2 - **அல் ஜஹ்ஃபா**: இது ராபிஃக் என்னும் ஊருக்கு சமீபமாக உள்ள ஒரு சிறிய ஊராகும். தற்போது மக்கள் ராபிஃகிலிருந்தே இஹ்ராம் கட்டிக் கொள்கிறார்கள். இது சிரியா வாசிகளின் எல்லை.

3 - **கர்னுல் மனாஸில்**. (ஸைலுல் கபீர்) இது தாயிஃபிற்குச் சமீபமான ஒரு இடம். இது நஜ்து வாசிகளின் எல்லையாகும்

4 - **யலம்லம்**: இது மக்காவிலிருந்து சுமார் 70 கி.மீ. தூரத்திலுள்ளது. இது யமன் வாசிகளின் எல்லையாகும். இந்தியாவிலிருந்து வருபவர்களுக்கும் இதுவே எல்லையாகும்

5 - **தாதுல் இர்க்**: இது இராக்வாசிகளின் எல்லையாகும்.

இவ்வைந்து இடங்கள் மேலே குறிப்பிட்ட ஊர்காரர்களுக்கும் இவ்விடங்கள் வழியாக வருகின்றவர்களுக்கும் எல்லைகளாகும் இந்த எல்லைகளுக்கு உள்ளே உள்ளவர்களும்,ஹரமில் உள்ளவர்களும் அவர்கள் இருக்கின்ற இடங்களிலிருந்தே இஹ்ராம் செய்து கொள்ள வேண்டும்

## எல்லையில் செய்ய வேண்டியவை:

இஹ்ராமுக்கு முன் செய்ய வேண்டிய சுன்னத்துகள்:

1 – நகங்களை வெட்டுவது, அக்குள் முடிகளைப் பிடுங்குவது அல்லது சிரைப்பது, மீசையைக் கத்தரிப்பது, மறைவிடத்தின் முடியைச் சிரைப்பது, குளிப்பது, உடம்புக்கு மட்டும் மணம் பூசிக் கொள்வது ஆடைகளுக்குப் பூசக் கூடாது.

2 – தைய்யலாடைகளைக் களைவது, கீழாடையும் மேலாடையும் அணிதல், பெண், தன்னை மூடி மறைத்துக் கொள்வதில் கவனம் செலுத்துவதுடன் தான் விரும்பிய ஆடைகளை அணிந்து கொள்ளலாம். அழகலங்காரங்களை வெளிப்படுத்தக் கூடாது. அன்னிய ஆடவர்கள் வரும் போது முகத்தையும் முன்கைகளையும் மறைத்துக் கொள்ள வேண்டும். கையுறைகளையும் முகமூடி அணிவதையும் தவிர்ந்து கொள்ள வேண்டும்.

3 – பள்ளிக்குச் சென்று அந்நேரம் தொழுகை நேரமாக இருந்தால் ஜமாஅத்துடன் தொழுவது அல்லது உழுவின் இரு ரக்அத்துகளைத் தொழுவது. அதன் பின்னர் இஹ்ராமைத் தொடங்குவது.

ஆகாயத்தில் பயணம் செய்பவராக இருந்தால் எல்லையில் இஹ்ராம் கட்டிக் கொள்வது கட்டாயமா

கும். எல்லையைத் தெரிந்து கொள்வது கஷ்டமாக இருந்தால் அதற்கு முன்னர் போதுமான கால அளவில் கட்டிக் கொள்ள வேண்டும். அவன் எல்லையில் செய்ய வேண்டிய சுத்தம், மணம் பூசுதல், நகங்கள் வெட்டுதல், இஹ்ராம் ஆடை அணிதல் ஆகியவற்றை அவன் விரும்பினால் விமானத்தில் ஏறுவதற்கு முன்னரோ அல்லது விமானத்தில் வைத்தோ முழுமையாகச் செய்து கொள்ளலாம், பின்னர் எல்கையை அடைவதற்கு முன்னர் அல்லது அதை அடைந்து கொள்ளும் நேரத்தில் இஹ்ராமை நிய்யத் செய்து கொள்ளவும்.

## இஹ்ராம் முறை:

லப்பைக் உம்ரதன் என்று கூறி இஹ்ராம் செய்ய வேண்டும்.

இஹ்ராம் செய்த பின்னர் தல்பியாச் சொல்வதும் அதை இஹ்ராம் செய்ததிலிருந்து கஃபத் துல்லாஹ்வில் வலம் வருவதை ஆரம்பிக்கும் வரை திரும்பத் திரும்ப சொல்லிக் கொண்டிருப்பது சுன்னத்தாகும்.

**தல்பியா:** லப்பைக்க அல்லாஹும்ம லப்பைக்க, லப்பைக்க லா ஷரீக்க லக், லப்பைக்க, இன்னல் ஹம்த வன் நிஃமத்த லக்க வல் முல்க், லா ஷரீக்க லக்.

**لبَيك اللهُمَّ لبَيك، لبَيك لا شريك لك لبَيك، إنَّ الحمد**

والنعمة لك والملك لاشريك لك.

**பொருள்:** வந்துவிட்டேன், இறைவா! உன்னிடமே வந்து விட்டேன், உன்னிடமே வந்து விட்டேன், உனக்கு யாதொரு இணையுமில்லை. உன்னிடமே வந்து விட்டேன் நிச்சயமாக புகழும் அருட்பாக்கியங்களும் ஆட்சியும் உனக்கே உரியன. உனக்கு யாதொரு இணையுமில்லை.

## இஹ்ராமில் தடுக்கப்பட்டவை:

இஹ்ராம் கட்டிக் கொண்டவருக்கு பின் வருபவை ஹராமாகும்.

1 – தலை மற்றும் உடம்பின் ஏனைய பாகங்களிலுள்ள முடிகளை நீக்குவது. எனினும் தேவையின் நிமித்தம் இலேசாக தலையைச் சொரிவதால் (முடி விழுந்து விடுவதில்) குற்ற மில்லை.

2 – நகங்களை வெட்டுதல், எனினும் நகம் உடைந்து விட்டால் அல்லது அது அவனுக்குத் தொல்லை கொடுத்துக் கொண்டிருந்தால் அதை வெட்டுவது குற்றமல்ல.

3 – வாசனையுள்ள சோப்பு போன்ற வாசனையுள்ள பொருட்கள் உபயோகிப்பது.

4 – உடலுறவு கொள்ளல் மற்றும் மனைவியை இச்சை

யுடன் பார்த்தல், அணைத்தல், முத்தமிடுதல், திருமணம் போன்ற உடலுறவைத் தூண்டக்கூடிய காரியங்களைச் செய்தல்.

5 – கையுறைகள் அணிதல்.

6 – வேட்டைப் பிராணிகளைக் கொல்லுதல், இவ்வனைத்தும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் ஹராமாகும். ஆண்களுக்கு அதிகப்படியாக இன்னும் சில ஹராமாகின்றன.

அ – தையல் ஆடை அணிவது, எனினும் இஹ்ராமிலுள்ளவன் பெல்ட், கண்ணாடி, வாட்ச் போன்ற தேவையுள்ள பொருட்கள் அணிவது கூடும்.

ஆ – தலையை ஒட்டினாற்போல ஏதேனும் கொண்டு தலையை மறைத்தல். தலையோடு ஒட்டாமல் சற்று உயரமாக வைத்து தலையை மறைப்பது குற்றமில்லை. உதாரணமாக குடை, வாகனம், கூடாரம் போன்றவற்றிற்குள் நுழைந்து கொள்வதைப்போல.

.ஆ. காலுறை அணிவது. செருப்புக் கிடைக்கவில்லையானால் பூட்ஸ் அணிந்து கொள்ளலாம். தடுக்கப்பட்ட இவற்றில் ஒன்றை யாரேனும் செய்துவிட்டால் அவனுக்கு மூன்று நிலைகள் உள்ளன.

1 – தக்க காரணமின்றிச் செய்பவன், இவன் பாவியாவான், அபராதமுண்டு.

2 – தேவைக்காகச் செய்பவன், இவன் பாவியாகமாட்

டான், அபராதமுண்டு.

3 – தக்க காரணத்துடன் செய்பவன், அதாவது அறியா மலோ, மறந்தோ, நிர்ப்பந்தமாகவோ செய்வது போல. இவனுக்குக் குற்றமுமில்லை. அபராதமு மில்லை.

## தவாஃப் (வலம் வருதல்)

மஸ்ஜிதுல் ஹராமில் (கஃபத்துல்லாவில்) நுழை யும் போது வலது காலை வைத்து பிஸ் மில்லாஹி, வஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலா ரசூலில்லாஹ் அல்லாஹும்ம மக்ஃபிர்லீ துநூபி வஃப்தஹ் லீ அப்வாப ரஹ்மத்திக்க என்று கூறுவது சுன்னத்தாகும்.

بسم الله وا لصّلاةُ والسّلامُ على رسُول اللهِ اَللهُمّ اغفـرْ لي ذ نوْبي وَا فتَـحْ لي اَبوَاب رحمَتِكَ .

பொருள்: அல்லாஹ்வின் பெயர் கூறி நுழைகிறேன் கருணையும், ஈடேற்றமும் அல்லாஹ்வின் தூதரின் மீ தும் உண்டாவதாக! இறைவா! எனது பாவங்களை மன்னித்துவிடு உனது அருள் வாயல்களை எனக்குத் திறந்துவிடு.

இந்தத் துஆ எல்லாப் பள்ளிகளுக்கும் பொதுவான தாகும். பின்னர் கஃபாவை வலம் வருவதற்காக அ தை முன்னோக்க வேண்டும், தவாஃப் என்பது அல்

லாஹ்விற்கு வணக்கம் செய்யும் எண்ணத்தில் ஹஜருல் அஸ்வதிலிருந்து ஆரம்பித்து இடதுபுறமாக கஃபாவை ஏழுமுறை சுற்றி வருவதாகும். முடிக்கும் போது ஹஜருல் அஸ்வதில் முடிக்க வேண் டும். தவாஃப் செய்யும் போது உளூவுடன் இருக்க வேண்டும்.

## தவாஃப் செய்யும் முறை:

1 - ஹஜருல் அஸ்வதின் பக்கம் சென்று, அதைத்தனது வலது கையால் தொட்டு, **பிஸ்மில்லாஹி அல்லாஹு அக்பர்** எனக் கூறிக் கொள்ளவேண்டும். இத்துடன் **அல்லாஹும்ம ஈமானம் பிக வதஸ்தீகம் பிகிதாபிக வவஃபாஅம் பிஅஹ்திக வத்திபாஅன் லிசுன்னத்தி நபிய்யிக** என்பதையும் சேர்த்து சொன்னால் சிறப்பாகும். முடிந்தால் அக்கல்லை முத்தமிட்டுக் கொள்ள வேண்டும். அதை முத்தமிட முடியவில்லையெனில் கல்லைத் தொட்ட தனது கையை முத்தமிட்டுக் கொள்ள வேண்டும். ஹஜருல் அஸ்வதைத் தொட முடிய வில்லையானால் அதை முன்னோக்கி, அல்லாஹு அக்பர் எனக்கூறி தனது கை கொண்டு அதன் பால் சுட்டிக் காட்டிக் கொள்ள வேண்டும், தனது கையை முத்தமிடக் கூடாது. பின்னர் கஃபத்துல் லாவை தனது இடப்புறமாக்கி, தவாஃபைத் தொடங்க வேண்டும். தான் வி

ரும்பிய துஆக்களைக் கேட்டுக் கொள்ளலாம் அல்லது தனக்குத் தெரிந்த குர்ஆன் வசனங்களை ஓதிக் கொள்ளலாம். தனது மொழியில் தனக்கும் தான் விரும்பியவருக்கும் துஆ செய்து கொள்ளலாம். இங்கு துஆ செய்வதற்கென குறிப்பான துஆக்கள் எதுமில்லை.

2 - ருக்னுல் யமானியை அடைந்துவிட்டால், முடிந்தால் அதைத் தொட்டு பிஸ்மில்லாஹி அல்லாஹு அக்பர் எனக் கூறிக் கொள்ள வேண்டும். தனது கையை முத்தமிடக் கூடாது. முடியாவிட்டால் தொடர்ந்து நடந்து கொண்டிருக்க வேண்டும். அதன் பக்கம் தனது கையால் சுட்டிக் காட்டவும், தக்பீர் சொல்லவும் கூடாது. ருக்னுல் யமானிக்கும் ஹஜருல் அஸ்வதிற்குமிடையில் **ரப்பனா ஆதினா ஃபித்துன்யா ஹஸனதன் வஃபில் ஆகிரதி ஹஸனதன் வகினா அதாபன் நார்** எனக் கூறிக் கொள்ள வேண்டும்

**ربنا آتنا في الدنيا حسنة وفي الآخرة حسنة وقنا عذاب النار**

3 - ஹஜருல் அஸ்வதை அடைந்துவிட்டால் வலக் கையால் தொட வேண்டும் முடியவில்லையானால் அல்லாஹு அக்பர் எனக் கூறி தனது கையால் சுட்

டிக் காட்டிக் கொள்ள வேண்டும். இப்படிச் செய்வது கொண்டு தவாஃபின் ஏழு சுத்துகளில் ஒரு சுத்து முடிவடைந்து விடுகிறது. மீதமுள்ள சுத்துகளையும் இவ்வாறே பூர்த்தி செய்யவும்.

4 – வலம் வருவதைத் தொடர்ந்து செய்ய வேண்டும். ஏழு சுற்றுக்களைப் பூர்த்தியாக்கும் வரை முதல் சுற்றில் செய்தது போலவே செய்து கொள்ள வேண்டும். ஹஜருல் அஸ்வதைக் கடந்து செல்லும் போதெல்லாம் தக்பீர் சொல்லிக் கொள்ள வேண்டும் இது போன்றே ஏழாவது சுற்றுக்குப் பின்னரும் தக்பீர் சொல்லிக் கொள்ள வேண்டும்.

5 – தவாஃபின்போது இரண்டு விஷயம் சுன்னத்தாகும்:

1 – மேலாடையின் நடுப்பகுதியை வலது அக்குளுக்குக் கீழ் வழியாகக் கொண்டு வந்து, ஆடையின் இரு ஓரங்களையும் இடது தோள் புஜத்தின் மீது போட்டு மூடிக் கொள்ள வேண்டும். வலது தோள் புஜம் மட்டும் திறந்திருக்க வேண்டும். தவாஃபை முடித்த பிறகு மேலாடையை இரண்டு தோள் புஜங்கள் மீதும், நெஞ்சின் மீதும் போட்டு மூடிக்கொள்ள வேண்டும். இது ஆண்களுக்கு மட் டும்தான்.

2 – முதல் மூன்று சுற்றில் கால்களை (எட்டி வைக்காமல்) சுருக்கி வைத்து சற்று வேகமாக நடக்க வேண்டும்.

தவாஃபுக்குப் பின்னர் மகாம் இப்றாஹீமுக்குப் பின்னால் இரண்டு ரக்அத்துக்கள் தொழுவது சுன்னத் தாகும். அப்படித் தொழும் போது மகாம் அவனுக்கும் கஃபத்துல்லாவிற்குமிடையே இருக்க வேண்டும். மு தல் ரக்அத்தில் ஃபாத்திஹாவும் குல் யாஅய்யுஹல் காஃபிரூனும் இரண்டாவது ரக்அத்தில் ஃபாத்திஹா வும் குல் ஹுவல்லாஹு அஹதும் ஓதிக் கொள்ள வேண்டும். கடுமையான நெருக்கடியினால் மகாம் இப்றாஹீமுக்குப் பின்னால் தொழ முடியவில்லையா னால் பள்ளியின் எந்த இடத்தில் வேண்டுமானாலும் தொழுது கொள்ளலாம். ஜம் ஜம் தண்ணீரை வயிறு புடைக்க அதாவது அதிகமாகக் குடிப்பது சுன்னத் தாகும்.

## சயீ செய்வது*

பின்னர் சயீ செய்யுமிடத்திற்குச் சென்று, ஸஃபா வின் பக்கமாகச் செல்ல வேண்டும். அதன் பக்கம் நெருங்கிவிட்டால் (இன்னஸ் ஸஃபா வல்மர்வத்த மின் ஷஆயிரில்லாஹ்) என்ற வசனத்தை ஓத வேண் டும். கஃபாவைக் காணுமளவிற்கு ஸஃபாவில் ஏற

* ஸஃபா, மர்வாக்கிடையில் ஓடுவது.

வேண்டும். பின்னர் கஃபாவை முன்னோக்கி தனது இரு கைகளையும் உயர்த்தி, அல்லாஹ்வைப் புகழ்ந்து தான் விரும்பிய துஆவைக் கேட்டுக் கொள்ள வேண்டும். உதாரணமாக லாஇலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர் லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீக்க லஹு, லஹுல் முல்க்கு வலஹுல் ஹம்து யுஹ்யீ வயுமீத்து வஹுவ அலாக் குல்லி ஷை இன் கதீர், லாஇலாஹ இல்லல்லாஹு வஹ்தா அன் ஜஸ வஃதா வநஸர அப்தா வஹஸமல் அஹ்ஸாப வஹ்தஹா

لا إله إلا الله والله أكبر، لا إله إلا الله وحده لا شريك له، له الملك وله الحمد يحيي ويميت وهو علي كل شيء قدير، لا إله إلا الله وحده أنجز وعده ونصر عبده وهزم الأحزاب وحده.

என மூன்று முறை கூறிக் கொண்டு நீண்ட நேரம் துஆச் செய்ய வேண்டும்.

பின்னர் அதிலிருந்து இறங்கி மர்வாவின் பக்கம் செல்ல வேண்டும். பச்சைத் தூணை அடைந் தால் அடுத்த பச்சைத் தூணை அடையும் வரை முடிந்த அளவு விரைந்து செல்வது சுன்னத்தாகும். இப்படிச் செய்யும் போது யாருக்கும் தொந்தரவு கொடுக்கக் கூடாது என்பது நிபந்தனையாகும். (விரைந்து செல்வது

ஆண்களுக்கு மட்டுமே பெண்களுக்கல்ல) மர்வாவை அடைந்துவிட்டால் அதில் ஏறி கிப்லாவை முன்னோக்கி, கைகளை உயர்த்தி, ஸஃபாவில் கூறியது போலக் கூறிக் கொள்ள வேண்டும். இப்படி ஒருவர் செய்து விட்டால் அவர் சயீக்குரிய ஏழு தடவைகளில் ஒன்றை முடித்துவிட்டார். துஆவிற்குப் பின்னர் மர்வாவிலிருந்து ஸஃபாவை நோக்கிச் செல்ல வேண்டும், முந்திய தடவை செய்தது போலவே செய்து கொள்ள வேண்டும். இவ்வாறு ஏழு தடவை செய்து கொள்ள வேண்டும். ஸயீயின் இடையில் துஆவை அதிகப்படுத்திக் கொள்வது சுன்னத்தாகும்.

ஸயீ செய்த பிறகு தலை முடியை முழுவதும் மழித்துக்கொள்ள வேண்டும்,அல்லது முழுவதும் குறைத்துக்கொள்ள வேண்டும்.என்றாலும் மழிப்பதே சிறந்தது. ஆனால் பெண்கள் தம் அனைத்து முடிகளிலிருந்தும் விரல் நுனி அளவிற்கு (சுமார் 3 செ.மீ.)வெட்டிக் கொள்ள வேண்டும். இதன் பிறகு உம்ராவிலிருந்து விடுபட வேண்டும். இதுவே உம்ரா செய்யும் முறை.

## உம்ராவின் கடமைகள்:

1 – இஹ்ராம், 2 – தவாஃப், 3 – ஸயீ.

இவற்றில் ஏதேனும் ஒன்றை ஒருவர் விட்டுவிட்டால் அதை நிறைவு செய்யாது வரை அவரது உம்ரா

பூர்த்தியாகாது.

## உம்ராவின் வாஜிபுகள்: (முக்கியமானவைகள்)

1 – எல்லையில் இஹ்ராம் செய்தல், 2 – தலை முடியை மழித்தல் அல்லது குறைத்தல்.

இவற்றில் ஏதேனும் ஒன்றை ஒருவர் விட்டுவிட்டால் அவர் குர்பானி கொடுக்க வேண்டும்.